REGD. No: TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு

**ஆசிரியர்**

ஆசிரியர் பணி உன்னத உழைப்பாகும். எதிர்கால சந்ததியை உருவாக்கும் நல்ல பணியை அவர்கள் மேற்கொண்டுள்ளனர்.

-பேரறிஞர் அண்ணா






**மனகட்டுப்பாடு**

மனப்பூர்வமான மனக்கட்டுப்பாடு ஒவனுடைய உடலாரோக்கியத்தை உருக்குலைப்பதில்லை

-அண்ணல் காந்

மலர் 4 சென்னை 9-5-1980 வெள்ளி (★) ❋ ● ❋ (★) வெளியீடு 10-5-1980 சனி இதழ் 180

# கழக அணி வேட்பாளர்கள் பிரச்சாரம் தீவிரம்

சென்னை, மே. 9-கழக அணி வேட்பாளர்கள் வீடு வீடாகச்சென்று மக்களைச் சந்தித்து ஆதரவு திரட்டி வருகிறார்கள்.

## கோவையில் அரங்கநாயகம் ஓட்டுவேட்டை

கோயமுத்தூர், மே. 9- கோவை மேற்கு தொகுதி கழக வேட்பாளர் அரங்கநாயகம் இன்று கோவை கோட்டை, வின்சென்ட் ரோடு பகுதியில் வீடு வீடாகச் சென்று ஓட்டுக் கேட்டார். அவருடன் சையது முகமது, அண்ணா நம்பி, சண்முகம், நடராஜன், காசிம், முகமது அலி ஜலீல் கரீம், ஆர் ரங்கசாமி கோவை முத்துசாமி மஜீத், சுலைமான், உசேன், சேதுமாதவன் மற்றும் பலர் சென்றனர்.

கழக வேட்பாளர்களும் மற்றும் தோழமைக் கட்சி வேட்பாளர்களும் தீவிரமாக தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டுள்ளனர்.

வீடு வீடாகச்சென்று மக்களைச்சந்தித்து அவர்கள் ஆதரவு திரட்டி வருகிறார்கள்.

ஆட்சியிலிருந்தபோது ஏராளமாகலஞ்சம் வாங்கி அண்ணாசாலையிலும், மற்ற பகுதிகளிலும் ஸ்தாவர, ஜங்கம சொத்துக்களை வாங்கி ஊரையே கொள்ளை அடித்த நபர்களுக்கு நாங்கள் எப்படி ஓட்டுப் போடுவோம்? புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் அணிக்குத்தான் எங்கள் ஓட்டு'' என்று மக்கள் குறிப்பாகத் தாய்மார்கள் வாய்விட்டுச் சொல்லி ஆதரவு தருகிறார்கள்.

பல இடங்களில் குளிர் பானங்கள் தந்தும் ஆரத்தி எடுத்தும் வெற்றி திலகமிட்டும் வரவேற்றார்கள்

டாக்டர் ஹண்டே இன்று அண்ணாநகர் தொகுதியில் திருவள்ளுவர்புரத்தில் மக்களைச் சந்தித்து ஆதரவு திரட்டினார்

## வி.வி.கிரி வாழ்த்து

கே ஏ கே இன்று கிரிரோடு கோடம்பாக்கம் ரோடு, வித்யாலயா பள்ளி சாலை ஆகிய பகுதிகளில் மக்களைச் சந்தித்தார், முன்னாள் ஜனாதிபதி வி வி கிரி வீட்டுக்கு சென்று கே ஏ கே ஓட்டுக் கேட்டார் வி வி கிரி அவரது புதல்வர் சங்கர் கிரி மற்றும் குடும்பத்தினர் கே ஏ கே வரவேற்றனர். கே ஏ கே வெற்றிபெற வி வி கிரி வாழ்த்தினார்.

கே ஏ கே யுடன் அங்கமுத்து, புரட்சிமணி, தாஸ் மற்றும் வட்ட அமைப்பாளர்கள் கழகத் தோழர்கள் ஆகியோர் சென்று ஆதரவு திரட்டினார்கள்.

(3-ம் பத்தி தொடர்ச்சி)

டுள்ளனர்.

மேலே கண்டுள்ளவர்களுடன் அந்தந்தத் தொகுதிகளைச் சேர்ந்த கழகத்தினரோ, சார்பு மன்றத் தோழர்களோ எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ளக் கூடாது.

கழகத் தலைமையின் இந்த அறிவிப்பை மீறி எவரேனும் நடந்து கொண்டால் அப்படிப்பட்டவர்கள் கடுமையான நடவடிக்கைக்கு ஆளாவார்கள் என்பதைத் தலைமைக் கழகம் தெரிவித்துள்ளது.

இந்த அறிவிப்பினை புரட்சித்தலைவர் ஒப்புதலுடனும் பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அவர்களின் அனுமதியுடனும் கழக அமைப்புச் செயலாளர் எச். வி. ஹண்டே அறிவித்துள்ளார்.

★ ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக்கும் பிரச்னை .... மூச்!

★ போலீஸ் சங்கத்துக்கு அனுமதி வழங்கும் பிரச்னை ... கப்சிப்!

★ விவசாயிகள் கடனை ரத்துச் செய்யும் பிரச்னை .. உஷ்ஷ்!

# தேர்தல் அறிக்கை மூலம் மக்களை ஏமாற்றும் தி.மு.க. பித்தலாட்டம்

## அண்ணா கொண்டு வந்த இருமொழிகொள்கை பலி?

சென்னை, மே 9- சமுதாயத்தின் பல்வேறு தரப்பினரும் எதிர்பார்த்த பிரச்னைகளை குப்பைக் கூடையில் தூக்கிப் போட்டுவிட்டு தேர்தல் அறிக்கையில் போலியான வாக்குறுதிகளை அறிவித்து தமிழகமக்களை ஏமாற்ற தி மு க முனைந்திருக்கிறது.

அண்ணா உருவாக்கிய இரு மொழிக் கொள்கை கடைபிடிக்கப்படும் என்று உறுதியான அறிவிப்பு எதுவும் தி.மு க. தேர்தல் அறிக்கையில் இல்லை இது போன்ற பல முக்கியப் பிரச்சினைகளில் தி. மு. க. உறுதியான அறிவிப்புகளைக் கொடுக்கவில்லை

நடக்க இருக்கும் சட்டமன்றத் தேர்தலையொட்டி தி. மு. க. தேர்தல் அறிக்கை வெளியிடப்பட்டுள்ளது.

ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக்க வேண்டும் என்ற ஆசிரிய சமுதாயத்தினரின் கோரிக்கை பற்றி அந்தத் தேர்தல் அறிக்கையில் எதுவுமே குறிப்பிடப்பட வில்லை.

அண்ணா தி மு கழகம் ஆட்சிப் பொறுப்பேற்றதும் ஆசிரியர்களை அரசு ஊழியர்களாக்குவோம் என்று புரட்சித்தலைவர் அறிவித்திருப்பது குறிப்பிடத்தக்கது.

தங்களது ஆட்சி ஏற்பட்டால், போலீசாருக்கு சங்கம் வைக்க அனுமதி கொடுப்போம் என்று தி மு க தேர்தல் அறிக்கையில் குறிப்பிடப்படவே இல்லை.

புரட்சித்தலைவர் முதல்வராக இருந்தபோது போலீசார் சங்கம் வைக்க அனுமதி அளித்தது நினைவிருக்கலாம்

ஆனால் தி மு க-இந்திரா காங்கிரஸ் கூட்டணி ஆட்சி நடக்கும் புதுவை மாநிலத்தில் போலீஸ் சங்கம் வைக்க அனுமதி மறுக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

### புதுவையில் என்ன வாழ்கிறது?

தங்கள் கடனை ரத்து செய்ய செய்யவேண்டும் என்று தமிழக விவசாயிகள் கோரி வருகிறார்கள். அவர்களது கோரிக்கை பற்றியும் தி மு க தேர்தல் அறிக்கையில் தெளிவான அறிவிப்பு எதுவும் இல்லை விவசாயிகளின் 9 அம்சக் கோரிக்கையைப்பற்றி பரிசீலிப்போம் என்ற அளவில் தான் குறிப்பிடப்பட்டுள்ளது.

மத்திய அமைச்சர் ஆர் வி சாமிநாதன் கூட இரண்டு மாதங்களுக்கு முன்பு இந்த பிரச்சினையில் இப்படித் தான் பரிசீலிப்பதாகக் கூறினார். இன்னும் பரிசீலனை நடந்து கொண்டிருக்கிறது இப்போது கருணாநிதியும் பரிசீலிப்பதாகக் கூறியிருக்கிறார். இந்திரா காங்கிரசும், தி. மு. க. வும் இந்தப் பிரச்னையை எத்தனைகாலத்துக்குத்தான் பரிசீலிப்பார்களோ என்ற எண்ணம் விவசாயிகளிடையே எழுந்துள்ளது.

தமிழ்நாட்டில் 1967ல் ஆட்சி மாற்றம் ஏற்பட்ட போது 'தமிழும் ஆங்கிலமும் போதும்' என்ற இருமொழித் திட்டத்தை பேரறிஞர் அண்ணா கொண்டு வந்தார் அவரது மறைவுக்குப் பின்னும் அந்தத் திட்டம் அமுல் படுத்தப்பட்டு வருகிறது.

இப்போது இந்திரா காங்கிரஸ் தி. மு. க. கூட்டணி ஆட்சி தமிழகத்தில் அமைந்தால்- காங்கிரசின் லட்சியங்கள் தான் அமுல் படுத்தப்படும் என்று இந்திரா காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான மூப்பனார் கூறியிருக்கிறார்.

மொழிக் கொள்கையைப் பொறுத்தவரையில் இந்தியையும், உள்ளடக்கிய 'மும்மொழிக் கொள்கை'

(3ம் பக்கம் பார்க்க)

### தாலிக்கு தங்கம்: நடக்கிற காரியமா?

தி. மு. கவின் வாதப்படி சில லட்சம் பட்டதாரிகளுக்கு மாதம் 50 ரூபாய் உதவிப் பணம் தருவதே நடக்காதகாரியம் என்றால் லட்சோப லட்சம் ஏழைப் பெண்களுக்கு தாலிக்கு தங்கம் தருவது என்றாலோ தங்கத்துக்குப் பதிலாக மான்யம் தருவது என்றாலோ ஆண்டு ஒன்றுக்கு எவ்வளவு கோடி செலவாகும்? இது நடக்கிற காரியமா என்ற கேள்வி எழுந்துள்ளது.

### மாதம் 50 ரூபாய் உதவித் தொகை வழங்க முடியாதா?

கழக அரசு இருந்தபோது தமிழகத்தில் வேலையின்றி இருக்கும் பட்டதாரிகளுக்கு மாதம் 50ரூபாய் உதவிப்பணம் வழங்கப்படும் என்று புரட்சித் தலைவர் அறிவித்தார்

தமிழகத்தில் படித்துவிட்டு வேலைஇல்லாமல் 20 லட்சம்பேர் இருப்பதாகவும், புரட்சித்தலைவர் அறிவித்தபடி அவர்களுக்கு மாதம் 50 ரூபாய் கொடுத்தால் ஆண்டு ஒன்றுக்கு 120 கோடி ரூபாய் ஆகும் என்றும், இது நடக்காத காரியம் என்றும், புரட்சித்தலைவரின் இந்த அறிவிப்பு வெறும் ஸ்டண்ட் என்றும் தி மு க தேர்தல் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

(புரட்சித்தலைவர் அறிவித்தபடி படித்து வேலையின்றி இருக்கும் பட்டதாரிகளுக்கு கேரளம், மேற்கு வங்கம், மத்தியப் பிரதேசம், மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களில் உதவிப்பணம் வழங்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது)

## புரட்சித்தலைவர் தொகுதி தேர்தல் அலுவலகம்

புரட்சித்தலைவர் போட்டியிடும் மதுரை மேற்குத் தொகுதியின் தலைமைத் தேர்தல் அலுவலகம் கீழ்க்கண்ட முகவரியில் இயங்குகிறது.

24, மேலப்பொன்னகரம்
மெயின் ரோடு, மதுரை - 10.
தொலைபேசி : 34486

**நாளை ஆரம்பம்**

## குற்றக் கூண்டில் கருணாநிதி!

'குற்றக்கூண்டில் கருணாநிதி' என்ற புதிய பகுதி நாளை (10ந் தேதி) முதல் 'அண்ணா' வில் ஆரம்பமாகிறது.

ஏழாண்டுக்காலம் தமிழக முதலமைச்சராக இருந்து அவர் புரிந்த ஊழல்கள் அத்தனையும் இந்தப் பகுதியில் அம்பலமாகும்.

குற்றக்கூண்டில் கருணாநிதியை ஏற்றி குறுக்கு விசாரணை செய்பவர் புலிகேசி.

திகைக்க திடுக்கிட- சிரிக்க- சிந்திக்க வைக்கும் இந்தப் பகுதி நாளை ஆரம்பம் ஆகிறது.

# தலைமைக் கழகம் ஒழுங்கு நடவடிக்கை: கட்டுப்பாடு மீறியோர் நீக்கம்

சென்னை, மே 9- கழகக் கட்டுப்பாட்டையும் விதிமுறைகளையும் மீறி எதிர்த்து வேட்புமனு தாக்கல் செய்துள்ளவர்கள் மீது தலைமைக்கழகம் ஒழுங்குநடவடிக்கை எடுத்து நீக்கிவைத்துள்ளது.

கழகம் போட்டியிடும் தொகுதிகளிலும், கூட்டணி வேட்பாளர்கள் போட்டியிடும் தொகுதிகளிலும் எதிர்த்து வேட்புமனு தாக்கல்செய்து கழகத்தின் கட்டுப்பாட்டிற்கும், நற்பெயருக்கும் களங்கம் விளைவிக்கும் வகையில் ஈடுபட்டுள்ளவர்கள் மீது புரட்சித்தலைவரின் ஒப்புதலோடு பொதுச்செயலாளர் டாக்டர் நாவலரின் அனுமதியோடு தலைமைக் கழகம் ஒழுங்கு நடவடிக்கை எடுத்து, அவர்களை நீக்கி வைத்துள்ளது.

இன்று தலைமைக் கழகம் ஒழுங்கு நடவடிக்கை எடுத்து கீழ்க்கண்டவர்களை கழகத்தின் அடிப்படை உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளிலிருந்தும் நீக்கி வைத்துள்ளது.

1. ராதாகிருஷ்ணன்நகர் (சென்னை மாவட்டம்) அம்சா

2. தாரமங்கலம் (சேலம் மாவட்டம்) எஸ் செம்மலை

3. பொன்னேரி (செங்கை மாவட்டம்) முனிவேலு

4) காட்பாடி (வடஆற்காடு) ஜெயவேலு

5) கோபி (கோவை மாவட்டம்) கே என் கே ராமசாமி

6) அரியலூர் (திருச்சி மாவட்டம்) ஏ எஸ் ஆராமிர்தம்

7) மானாமதுரை (முகவை மாவட்டம்) உக்ரபாண்டியன்

8. உசிலம்பட்டி (மதுரை மாவட்டம்) பி கே எம் முத்துராமலிங்கம்

9. பூவிருந்தவல்லி (செங்கை மாவட்டம்) பூவை சின்னசாமி

10. திருவள்ளூர் (செங்கை மாவட்டம்) திருவள்ளூர் செல்வராசு

மேலே கண்டுள்ளவர்கள் கழகத்தின் அடிப்படை உறுப்பினர் பொறுப்பு உள்பட அனைத்துப் பொறுப்புகளிலிருந்தும் நீக்கப்பட்

(1-ம் பத்தி பார்க்க)



## குமரி அனந்தன் நிகழ்ச்சிகள்

12-5-1980 காலை 9 மணி பூந்தமல்லி
காலை 10-30 மணி சுங்குவார்சத்திரம்
பகல் 12-30 மணி காஞ்சிபுரம்
மாலை 5 மணி செய்யாறு
மாலை 6 30 மணி ஆரணி
இரவு 8 மணி போளூர்
இரவு 9 மணி தண்டராம்பட்டு
இரவு 11 மணி திருவண்ணாமலை பொதுக்கூட்டம்

13 5-1980 காலை 9 மணி ஊத்தங்கரை
காலை 11-30 மணி கிருஷ்ணகிரி
பகல் 1 மணி காவேரிப்பட்டினம்
மாலை 4 30 மணி பாலக்கோடு
மாலை 6 மணி பெண்ணாகரம்
இரவு 11-30 மணி தருமபுரி பொதுக்கூட்டம்

## எழும்பூர் தொகுதி வட்ட தேர்தல் ஆலோசனை கூட்டம்

| வட்டம் | இடம் | நேரம் |
|---|---|---|
| 63 | 11 பேரக்ஸ் ரோடு, டாக்டர் அம்பேத்கார் நகர், பெரியமேடு. | 10-5-80 சனி மாலை 6 30 - 8 30 |
| 64 | 64 அவதானம் பாப்பையர் தெரு, சூளை, சென்னை-7. | 10-5 80 சனி இரவு 8 30 - 10-00 |
| 65 | 5 ரங்கைய செட்டிதெரு, சூளை, சென்னை-7. | 11-5-80 ஞாயிறு மாலை 6 00 - 8 00 |
| 66 | 211, ஸ்டான்ஸ் ரோடு, பி. பி. சென்னை-12, பட்டாளம். | 11-5-80 ஞாயிறு இரவு 8.00 - 10 00 |
| 67 | 7. புதுத் தெரு. குயப்பேட்டை சென்னை-12 | 12 5-80 திங்கள் மாலை 6-30 - 8-30 |
| 68 | 107, செல்லப்பமுதலி தெரு ஓட்டேரி, சென்னை-12. | 1 25 80 திங்கள் இரவு 8 30 - 10 30 |
| 69 | 51. வி.வி.கோயில் தெரு, பெருமாள் பேட்டை, சென்னை-12 | 13 5-80 செவ்வாய் மாலை 6 30 - 8 30 |
| 83 | பின்னர் அறிவிக்கப்படும் | 13-5-80 செவ்வாய் இரவு 9 00 - 10 30 |
| 84 | பெருமாள் செட்டி தெரு, எழும்பூர். | 14-5 80 புதன் மாலை 6 30 - 8 30 |
| 85 | தளசிங்க நாயக்கன் தெரு, புதுப்பேட்டை | 14-5 80 புதன் இரவு 9 00 - 11-00 |

ஆலோசனை கூட்டத்தில் வேட்பாளர் கலந்து கொள்வார் அனைத்து கூட்டணி கட்சித் தோழர்களும் ஆதரவாளர்களும் கலந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

க. தெய்வசிகாமணி

## தியாகராயநகர் தொகுதி செயல்வீரர்கள் கூட்டம்

தியாகராயநகர் தொகுதி ஜனநாயக முற்போக்கு கூட்டணி ஆலோசனைக் கூட்டம்

109 வது வட்டம்
10ந் தேதி சனி மாலை 6மணி
111 வது வட்டம்
11ந் தேதி ஞாயிறு இரவு 7மணி
116 வது வட்டம்
11ந் தேதி ஞாயிறு இரவு 9மணி
114 வது வட்டம்
12ந் தேதி திங்கள் இரவு 7மணி
115 வது வட்டம்
12ந் தேதி திங்கள் இரவு 9மணி
117 வது வட்டம்
13ந் தேதி செவ்வாய் இரவு 7மணி
118 வது வட்டம்
13-ந் தேதி செவ்வாய் இரவு 9மணி
119 வது வட்டம்
14-ந் தேதி புதன் இரவு 7மணி
120 வது வட்டம்
14-ந் தேதி புதன் இரவு 9மணி
121 வது வட்டம்
15-ந் தேதி வியாழன் இரவு 7மணி
110 வது வட்டம்
15-ந் தேதி வியாழன் இரவு 9மணி

கூட்ட இட விவரங்களை கழக வட்ட அமைப்பாளர்கள் அறிவிப்பார்கள்.

மேற்கண்ட கூட்டங்களில் தி.நகர் தொகுதி கழக அணி வேட்பாளர் டாக்டர் சவுரிராஜன் கலந்து கொள்கிறார்.

கழக, மன்ற, மகளிர் மாணவர், தோழமைக் கட்சித் தோழர்கள் திரளாக கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறேன்.

சா. கோவிந்தசாமி

Published by K. Ravindran on behalf of Thangamani Publications 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1. First Main Road, United India Colony, Madras-24. Editor : E. PARASURAMAN

டாக்டர்ராதாகிருஷ்ணன்நகரில்

## ஆர். எம். வீ. - எஸ். டி. எஸ். பங்கேற்கும் கூட்டம்

சென்னை மே. 9- டாக்டர் ராதாகிருஷ்ணன் நகரில் போட்டியிடும் கழக வேட்பாளர் ஐசரிவேலனை ஆதரித்து தொகுதி தலைமை தேர்தல்பணிமனை திறப்பு விழா இன்று மாலை 7 மணிக்கு நடைபெறுகிறது.

திருவொற்றியூர் நெடுஞ்சாலை மகாராணி திரையரங்கு எதிரில்விழா நடைபெறுகிறது.

ஆர். எம். வீ. தலைமையில் எஸ்.டி.எஸ். தேர்தல் பணிமனையை திறந்துவைக்கிறார்.

குமரிஅனந்தன், கா. பாண்டியன், செய்குத்தம்பி, மதுசூதனன், எம். கே. டி. சுப்பிரமணியம், எஸ். டி. சண்முகம், சேர்மன் செல்வராஜ், வண்ணைக் கலைத்தாசன், முகுந்தன் மற்றும் பலர் பேசுகிறார்கள்.

## குமரி அனந்தன் பேசுகிறார்

சென்னை, மே9 துறைமுகத் தொகுதியைச் சேர்ந்த ஆச்சாரப்பன் தெருவில் நாளை 10ந்தேதி (சனிக்கிழமை) மாலை 7மணிக்கு கழக அணி தேர்தல்பிரச்சார பொதுக் கூட்டம் நடக்கிறது.

எஸ். எம். கருணாநிதி தலைமை வகிக்கிறார் குமரி அனந்தன், கு. கஜேந்திர பாபு, பெ சந்திரா, செய்குத்தம்பி, எம்.எஸ்.மணி ஏவ் கிருஷ்ணமூர்த்தி மண்ணடி கிருஷ்ணமூர்த்தி வண்ணை கலைதாசன் எம் பி ஜியாவுதீன் எம் வீ ராமன் ஏ கே பீர்முகமது கே தாமோதரன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

## பண்ருட்டி தேர்தல் அலுவலக முகவரி

பண்ருட்டித் தொகுதி அனைத்திந்திய அண்ணா தி. மு. க. தேர்தல் அலுவலகம் 26சி, ராஜாஜி வீதி, பண்ருட்டி-607106 போன்: 334

## மயிலைத் தொகுதி தேர்தல் பணிமனைத் திறப்பு விழா

சென்னை, மே 9- சென்னை மயிலைத் தொகுதி தேர்தல் பணிமனை திறப்பு விழா வரும் 10ந் தேதி மாலை 6 மணியளவில் 81, ஆர். கே. மடம் சாலையில் (ராபர்ட்சன் பேட்டை) மயிலைத் தமிழ்மணி தலைமையில் மந்தவெளி நடராசன் முன்னிலையில் நடைபெறுகிறது.

திறப்பு விழாவில் ஜேப்பியார், டி, கே. கபால், ஜெ.பாலன், மயிலை நரசிம்மன், டி, தம்பிதுரை, கு.க. செல்வம், கோ.ப. அமிர்தம், துளசிங்கம், சீனிவாசன், கிருஷ்ணன், அமாச்பாட்சா, பக்கிரிசாமி ஜெ.ஜெகன், சிவா. பாலன், மூர்த்தி, மாயன், மற்றும் பலர் பேசுகின்றனர்.

## விமலா-வாசன் கலைக்குழு நிகழ்ச்சிகள்

மே 10,11 மதுராந்தகம் 12, காஞ்சிபுரம் 13,14 அரக்கோணம், 15,16 அண்ணாநகர் 18,19 உத்திரமேரூர் 20முதல் 25 வரை கரூர், திருச்சி மாவட்டம் 26லிருந்து 29 வரைமதுரை மாவட்டம்.

# ஆர். வி. சாமிநாதன்மீது கருணாநிதி பாய்ச்சல்

சென்னை, மே 9- பிரதமர் இந்திராவின் தேர்தல் பிரச்சார சுற்றுப்பயண திட்டங்கள் பற்றி, மத்திய மந்திரி ஆர். வி. சுவாமிநாதனுக்கு கருணாநிதி கண்டனம் தெரிவித்துள்ளார்.

தமிழக இந்திரா காங்கிரஸ் தலைவராக நான் இருக்க, ஆர். வி. சுவாமிநாதன் எப்படி இந்திரா காந்தியின் சுற்றுப்பயணத் திட்டத்தை வெளியிடுவது என, எம். பி. சுப்பிரமணியம் ஆட்சேபம் தெரிவித்துள்ளார்.

தமிழ்நாட்டில் பிரதமர் இந்திரா காந்தி 11-ந் தேதியும் 12-ந் தேதியும் சுற்றுப்பயணம் செய்வார் என அறிவிக்கப்பட்டிருந்தது.

ஆனால் தமிழக இந்திரா காங்கிரஸ் கட்சியின் வேட்பாளர் தேர்வு குறித்து ஏற்பட்ட குழப்பம் காரணமாக இந்திராவின் தமிழக வருகை ஒத்தி வைக்கப்படும் எனக் கூறப்பட்டது.

இந்திராவின் சுற்றுப் பயணம் குறித்து கருணாநிதி, மத்திய மந்திரிகள் ஆர் வெங்கட்ராமன் ஆர். வி சாமிநாதன் உட்பட இந்திரா காங்கிரஸ் தலைவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்தினர்.

தி. மு. க. போட்டியிடும் தொகுதிகள் பலவற்றில் இந்திரா பிரச்சாரம் செய்யாவிட்டால் வெற்றி வாய்ப்பு பாதிக்கப்படும் என்றும் கருணாநிதி கூறினாராம்.

ஆனால் இந்திரா காங்கிரஸ் தலைவர்கள் இதனை ஏற்றுக்கொள்ளவில்லை.

தி.மு.க. போட்டியிடும் கரூர், திருச்சி, தஞ்சை, திருப்பத்தூர் ஆகிய 4 தொகுதிகளில் மட்டுமே இந்திரா காந்தி பிரச்சாரம் செய்ய இயலும் எனக் கூறிவிட்டனராம்.

இவ்வாறு கூறியதோடு மட்டுமல்லாமல், இந்திராவின் தேர்தல் சுற்றுப் பயண விவரத்தை ஆர் வி சுவாமிநாதன் வெளியிட்டுவிட்டார்.

## கருணாநிதி கண்டனம்

எங்களிடம் நேரில் தெரிவித்தபடி இந்திராவின் சுற்றுப்பயணம் இல்லையே என கருணாநிதி பகிரங்கமாக நிருபர்களிடம் ஆர். வி. சுவாமிநாதன் பற்றி கண்டனம் தெரிவித்துள்ளார்.

ஆர்.வி. சுவாமிநாதன் அறிவித்த இந்திராசுற்றுப் பயணத்திட்டம் பற்றி தமிழக இ.காங்கிரஸ் தலைவர் எம். பி. சுப்பிரமணியம் ஆச்சரியம் தெரிவித்தார். தமிழககட்சித் தலைவராக நான் இருக்க எனக்குத் தெரியாமலேயே ஆர். வி. சுவாமிநாதன் இந்திராவின் சுற்றுப்பயணத் திட்டத்தை வெளியிடுவதா என எம். பி. சுப்பிரமணியம் ஆட்சேபம் தெரிவித்தார்.

## தலைமைக் கழக அறிக்கை எண்: 48-80

## அண்ணாநகர் தொகுதியில் மகளிர் பிரிவு அமைப்பாளர்கள்

சென்னை அண்ணாநகர் சட்டமன்றத் தொகுதியில் உள்ள பின்கண்ட வட்டங்களுக்கான மகளிர் பிரிவு அமைப்பாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

| வட்ட எண் | அமைப்பாளர் பெயர் |
|---|---|
| 70 | திருமதி என். பேபி |
| 71 | என். இரத்தினம்மாள் |
| 72 | பி. வடிவாம்பாள் |
| 73 | ஜே. சரசா |
| 74 | டி. ஆர். சீனியம்மாள் |
| 75 | எம். எஸ். சரஸ்வதி |
| 77 | கண்ணம்மாள் |
| 78 | ஏ. வசந்தி ரங்கநாதன் |
| 80 | ஜி. வடிவாம்பாள் |
| 82 | ஜே. பத்மாவதி |

திருமிகு புரட்சித் தலைவர் அவர்களின் ஒப்புதலுடன் இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

இரா. நெடுஞ்செழியன்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

சென்னை
9-5-1980

## தலைமைக் கழக அறிக்கை எண் 49-80

## தலைமைக் கழக அறிவிப்பு

# பண்ருட்டி நகர தோழர்களுக்கு...

## டி. ஆறுமுகம் நீக்கம்

பண்ருட்டி சட்டமன்ற தொகுதியில் கழகத்தின் கட்டுப்பாட்டை மீறியும் கழகத்தின் நற்பெயருக்கு கேடு ஏற்படுத்தும் வகையிலும் செயல்பட்டுவரும் பண்ருட்டி நகர் 7-வது வார்டைச் சேர்ந்த வாழைக்காய் ஆறுமுகம் என்கிற டி ஆறுமுகம் இன்று முதல் கழகத்தின் அடிப்படை உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்பிலிருந்தும் உடனடியாக நீக்கப்படுகிறார். மேற்படி நபருடைய செயல்களுக்கும் கழகத்துக்கும் எவ்வித தொடர்பும் கிடையாது என்பதுடன் மேற்படி நபருடன் கழக சார்புமன்ற தோழர்கள் யாரும் எவ்வித தொடர்பும் வைத்துக்கொள்ளக்கூடாது என்று அறிவுறுத்தப்படுகிறார்கள்.

திருமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அவர்களின் அனுமதியுடனும் இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச் வி ஹண்டே எம் எல் சி
அமைப்புச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா திமுக

சென்னை
9-5 80

# 'அண்ணா'வில்

தத்துவமேதை

டி. கே. சீனிவாசன்

எழுதும் தொடர் கட்டுரை

## "களம் நோக்கி விரைவோம்"

12-5 80 திங்கட்கிழமையிலிருந்து தொடங்குகிறது

## தி. மு. க. பித்தலாட்டம்

(முதற் பக்கத் தொடர்ச்சி)

தான் இந்திரா காங்கிரசின் லட்சியம்.

தமிழகத்தில் இவர்களின் கூட்டணி ஆட்சி ஏற்பட்டால் மும்மொழித் திட்டம் அமுலாக்கப்பட்டு இந்தியைத் திணிக்கும் அபாயம் இருக்கிறது இந்த அபாயத்தைப் புரிந்தும்கூட, இதுபற்றி தி மு க தேர்தல் அறிக்கையில் தெளிவான அறிவிப்பு இல்லை பதவிக்காக அண்ணா தந்த இருமொழிக் கொள்கையைத் தாரை வார்க்க தி மு க தயாராகி விட்டதாகவே தோன்றுகிறது.

சமுதாயத்தின் சகல தரப்பினரும் எதிர்பார்த்த எந்த அறிவிப்பும் தி மு க தேர்தல் அறிக்கையில் இடம் பெறவில்லை என்பது ஒரு புறமிருக்க, தமிழக மக்களை ஏமாற்றும் போலி வாக்குறுதிகளை ஏராளமாகத் தந்திருக்கிறார்கள் அவற்றில் குறிப்பிடத்தக்க அறிவிப்பு தாலிக்குத் தங்கம் என்ற அறிவிப்பாகும்.

சிலலட்சம்பேரேவாழும் சின்னஞ்சிறு மாநிலமான புதுவையில் தி. மு. க. இந்திரா காங்கிரஸ் கூட்டணி ஆட்சி நடக்கிறது.

அங்கு ஏழைப் பெண்களின் திருமணத்துக்கு தாலித் தங்கத்துக்கு மான்யம் தருவோம் என்று ஆட்சியினர் அறிவித்தனர், ஆனால் அதற்கானநிதிஒதுக்கீடு பட்ஜெட்டில் இல்லை அந்த அறிவிப்பு எப்போதிலிருந்து அமலாகும் என்றும் சொல்லவில்லை அவர்கள் அறிவித்த பிறகு எத்தனையோ ஏழை வீடுகளில் அங்குத் திருமணம் நடந்திருக்கிறது எந்த மணப்பெண்ணுக்கும் தாலித் தங்கத்துக்கு மான்யம் தரப்படவில்லை

இந்த லட்சணத்தில் ஐந்து கோடிப்பேர் வாழும் தமிழகத்தில், ஏழைப் பெண்கள் திருமணத்தின் போதுதாலிக்குத்தங்கமோ அல்லது அந்தத் தங்கத்துக்குரியமான்யத்தொகையோ வழங்க முயற்சிக்கப்படும் என்று திமுக தேர்தல் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. இது தமிழக மக்களிடம் ஓட்டுக்களைப் பெறுவதற்கான ஆசை வார்த்தை என்று மக்கள் கருதுகிறார்கள்.

பேரணி விபத்தில் உயிர் நீத்த

# வேலு குடும்பத்துக்கு கழகம் தந்த ரூ. 5000: கே. ஏ. கே. வழங்கினார்

சென்னை, மே. 9-தமிழக அரசு ஆட்சி கலைப்பு கண்டனப் பேரணியின் போது, விபத்தில் உயிர் மாண்ட அண்ணா பொதுப் பணி மன்றத்தலைவர் வேலுவின் குடும்பத்திற்கு புரட்சித்தலைவரின் கட்டளைப்படி, அண்ணா தி மு க வின் தலைமைக் கழக சார்பில், ஆயிரம் விளக்கு தொகுதி வேட்பாளர் கே ஏ கே ரூ 5000 வேலுவின் துணைவியாரிடம் வழங்கினார்.

நேற்று இரவு ஆயிரம் விளக்கு தொகுதியில் சத்தியமூர்த்தி நகர் கிரியப்பா சாலையில் தேர்தல் விளக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

வேட்பாளர் கே. ஏ. கே. மாநில மகளிர் பிரிவு அமைப்பாளர் வளர்மதி தொகுதி அமைப்பாளர் வி அங்கமுத்து மத்திய சென்னை எம் ஜி ஆர் மன்ற அமைப்பாளர் சி. வி. அன்புதம்பி தி. நகர் தொகுதி அமைப்பாளர் கோவிந்தசாமி வண்ணை கோவிந்தன் ஆகியோர் கலந்துகொண்டனர். பேரணி விபத்தின் போது மரணம் அடைந்த வேலுவின் குடும்பத்திற்கு, அவரது துணைவியாரிடத்தில் ஆயிரம் விளக்கு தொகுதி வேட்பாளர் கே. ஏ. கே. புரட்சித்தலைவரின் சார்பில் 5000 ரூபாய் அளித்தார்!

கூட்டத்தில் கே.ஏ.கே. பேசும்போது, "கழகக் குடும்பத்தில் நடக்கும் இப்படிப்பட்ட அவலநிலையின்போது, தானாக முன் வந்து உதவி செய்யும் அருள் உள்ளம் புரட்சித் தலைவரின் உள்ளம்!

கழகத்தின் வளர்ச்சிக்காகதங்களை அர்ப்பணித்த தொண்டர்களை புரட்சித் தலைவர் என்றும் ஆதரவற்றவர்களாக விடமாட்டார் என்பதற்கு, இந்த நிகழ்ச்சி நல்ல முன் மாதிரியாகும்," என்றும் விளக்கிப் பேசினார்.

வேட்பாளர் கே. ஏ. கே. அவர்களுக்கு பல்வேறு மன்றங்களின் சார்பாக கைத்தறி ஆடைகளும் மலர்மாலைகளும் தேர்தல் நிதியும் அளிக்கப் பட்டன.

## நமது மேடை

### தியாகராயநகர்

9-5 80 வெள்ளி மாலை 7-மணிக்கு 98 உஸ்மான் சாலையில் கு க செல்வம் தலைமையில் தேர்தல் பணிமனை திறப்புவிழா பங்கேற்போர்

கே ஏ கே குமரிஅனந்தன் வேட்பாளர் சவுரிராசன் சா கோவிந்தசாமி தி நகர் மூர்த்தி, எஸ் சண்முகம், கந்தசாமி, கிருஷ்ணப் பிள்ளை மற்றும் பலர்.

### ராயபுரம்

9-5-80- வெள்ளி மாலை 7-மணிக்கு பனைமரத் தொட்டி அருகில் ஆர். சண்முகம் தலைமையில் பேசுவோர்:

அடியார், தா. பாண்டியன் டி. கே. கபாலி, ஏ. தாஸ், ஞானசேகரன், மற்றும் பலர்.

### ஓட்டேரி

10-5 80 சனி இரவு 7 மணிக்கு 40வது வட்ட ஆலோசனைக் கூட்டம் தரங்கை கண்ணன் தலைமையில் 30 'அ' சிவசண்முகபுரம் என்ற முகவரியில் நடைபெறுகிறது. அனைவரும் வருகை தருமாறு டி. கே. ராமன் கேட்டுக் கொண்டுள்ளார்.

### பெரியமேடு

10-5 80 சனி இரவு 8 மணிக்கு 62-வதுவட்ட தேர்தல் ஆலோசனைக் கூட்டம 60 சாமிப்பிள்ளை தெரு என்ற முகவரியில் பி. எம். பரசுராமன் தலைமையில் நடைபெறுகிறது. வேட்பாளர் லால்சந்த் டாகா கலந்துகொள்கிறார்.

### சூளை

10 5-80 சனி மாலை 7 மணிக்கு 61வதுவட்ட ஜனநாயக முற்போக்கு அணி தேர்தல் ஆலோசனைக் கூட்டம் 57 பெரியதம்பி முதலி தெருவில் சி கணபதி தலைமையில் ஆர், டி, தேவராஜ் முன்னிலையில் நடைபெறுகிறது. அனைவரும் கலந்து கொள்ளுமாறு இளைய கண்ணன் கேட்டுக் கொண்டுள்ளார்.

### வடபழனி

10-5-80 சனி மாலை 7 மணிக்கு சிங்காரவேலர் திடலில் பா. ரா. லட்சுமிபதி தலைமையில் பேசுவோர்:

ராகவானந்தம், டி. வி. என், டாக்டர் சவுரிராஜன் பெ. சந்திரா, கு. க. செல்வம், சா, கோவிந்தசாமி, கே. கலியமூர்த்தி, தி. நகர் மூர்த்தி, ராமச்சந்திரன், தண்டபாணி, துரைவரசன் சச்சிதானந்தம், சண்முகநாதன், அரங்கநாதன், செல்வம் மற்றும் பலர்.

### பூங்கா நகர

சென்னை, மே. 9-பூங்கா நகர் கழக பொது உறுப்பினர் கூட்டம் இன்று (9-ம் தேதி) மாலை 7 மணிக்கு நடைபெறுகிறது.

இந்தக் கூட்டம் பெருமாள் கோயில் தோட்டத் தெருவில் இரா. துரைராசன் தலைமையில் நடைபெறுகிறது.

பூங்காநகர் தொகுதி வேட்பாளர் லால் சந்த் டாகாவும் கூட்டத்தில் கலந்துகொள்கிறார்.

கழகத் தோழர்களும், மன்ற, சார்பு மன்ற தோழர்களும் கலந்து கொள்ளுமாறு 56வது வட்ட அமைப்பாளர் ஆ. செல்வராஜ் கேட்டுக் கொண்டுள்ளார்.



# ஒரேநாளில் ஒன்பது ஊர்களில் விவசாயிகள்மீது துப்பாக்கிச்சூடு நடத்திய ஆட்சி கருணாநிதி ஆட்சி

★ முடக்கப்பட்டிருக்கும் முன்னேற்றத் திட்டங்கள் செயல்பட

★ சர்வாதிகாரத்தை வீழ்த்தி - ஜனநாயகம் காத்திட

★ நிலையான - நிம்மதியான ஆட்சி தமிழகத்தில் மலர்ந்திட

# கழக அணிக்கு வாக்களிப்பீர்

## தமிழ்ப்பெருங்குடி மக்களுக்கு ஆர். எம். வீ. வேண்டுகோள்

சென்னை, மே 9-கழக அரசு கொணர்ந்து தற்போது முடக்கப்பட்டிருக்கும் முன்னேற்றத் திட்டங்கள் செயல்-வடிவம் பெற சர்வாதிகாரப் போக்கிற்குச் சாவு மணியடித்து ஜனநாயகம் காக்க-நிலையான, நிம்மதியான ஆட்சி தமிழகத்தில் மலர அனைத்திந்திய அண்ணா தி. மு. க. அணிக்கு வாக்களியுங்கள் என்று தமிழக மக்களுக்கு ஆர். எம். வீ. வேண்டுகோள் விடுத்தார்.

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தின் சார்பில் நேற்று இரவு 7-45 மணிக்கு ஆர். எம். வீ. வானொலியில் ஆற்றிய உரை முழு விவரம் வருமாறு:-

தமிழ்ப்பெருமக்களே!

தாய்மார்களே!

எதிர்காலத்தை படைக்க இருக்கின்ற இளைஞர்களே!

உங்கள் அனைவருக்கும் புரட்சித்தலைவர் சார்பிலும், அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தின் சார்பிலும் அன்பான வணக்கங்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நான்கு மாத இடைவெளியில் இரண்டாவது முறையாக தமிழ்நாட்டு மக்கள் ஒரு பொதுத் தேர்தலைச் சந்திக்க நேர்ந்துள்ளது...

கடந்த மூன்று ஆண்டுகளுக்குள் நான்குமுறை பொதுத்தேர்தல்களைச் சந்திக்க வேண்டிய கட்டாயத்திற்கு நாம் ஆளாக்கப்பட்டிருக்கிறோம்.

ஐந்தாண்டுக்காலம் தமிழகத்தில் ஆட்சி நடத்தும் உரிமையை அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்திற்கு தமிழ் மக்கள் அளித்தனர். ஆனால், இரண்டரை ஆண்டுகளில், மக்கள் அளித்த அந்த உரிமையை, மத்திய அரசு சட்டத்தின் பெயரால் பறித்துவிட்டனர். தமிழகத்தில் உள்ள உங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தமிழக சட்டசபையை இரவோடு இரவாக கலைத்தார்கள்.

பெரும்பான்மையுடன் நிலையான ஆட்சி நடத்திய அண்ணாவின் அரசை அகற்றினர்.

இதன் காரணமாக, ஐந்து ஆண்டுகள் கழித்து அதாவது 1982 ஜூன் திங்களில் நடைபெற வேண்டிய தமிழக சட்டமன்றத் தேர்தல் இரண்டரை ஆண்டுகளில் நடைபெற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது.

இப்படி ஆட்சியை அகற்றி சட்டமன்றத்தைகலைத்ததற்கு என்ன காரணம்? இன்றுவரை மத்திய அரசின் சார்பில் தகுந்த காரணமோ விளக்கமோ தரப்படவில்லை. ஆனால்...ஒரே ஒரு காரணம் சொல்லப்படுகிறது ...அதாவது கடந்த ஜனவரி திங்கள் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் "நாங்கள் வென்றுவிட்டோம் ... மக்கள் எங்களுக்கு வாக்களித்து நாடாளுமன்றத்தில் மிகப் பெரும்பான்மை பலத்தை தந்து விட்டார்கள் ... அதனால் எங்கள் கட்சியைச் சேராத மாநில ஆட்சிகளை அகற்றுகிறோம் ... சட்டமன்றங்களைக் கலைக்கிறோம்" என்று இந்தியப் பேரரசும், பேரரசை நடத்தும கட்சியினரும் தெரிவிக்கிறார்கள்.

### பதறும் மக்கள்

நியாயமற்ற இந்தக் காரணத்தைக் கேட்டு தமிழக மக்கள் அதிர்ச்சி அடைந்திருக்கிறார்கள்.

இந்தியாவிற்கு, ஒரு நிலையான ஆட்சி தேவை என்றும், அப்படிப்பட்ட ஆட்சியை இந்திரா காங்கிரஸ்தான் அளிக்க முடியும் என்றும் கூறினார்கள். அந்தப் பேச்சை நம்பி ஒரு நிலையான ஆட்சி அமையவும், அந்த ஆட்சியும் ஒரே கருத்துள்ள ஒரு கட்சி ஆட்சியாக அமைய வேண்டுமென விரும்பி வாக்களித்தோம். அப்படி வாக்களித்ததற்குத் தண்டனையாக தமிழகத்தில் பெரும்பான்மை பலத்துடன் ஒரு கட்சி ஆட்சியாக, நிலையான ஆட்சியாக, ஊழலற்ற, தூய்மையான ஆட்சியாக நடைபெற்ற அரசை அகற்றி விட்டார்களே என்று பட்டிதொட்டிகளிலெல்லாம் மக்கள் பதறுகிறார்கள்..ஏழை எளிய மக்கள் எங்கள் அண்ணாவின் அரசை கலைத்துவிட்டார்களே என்று துடிக்கிறார்கள்.

நடுநிலையாளர்கள், நகர்ப்புறத்தில் உள்ளவர்கள் நல்ல மனம் படைத்தவர்கள், அரசியல் கட்சி ஆசாபாசங்களுக்கு அப்பாற்பட்டவர்கள், படித்தவர்கள், பண்பாளர்கள்-குறிப்பாகத் தாய்மார்கள் 'இது என்ன அநீதி' என்று ஏக்கமுடன் கேட்கிறார்கள்.

கிராமப்புறத்துத் தாய்மார்கள் 'எங்களை ஏமாற்றி ஓட்டு வாங்கி விட்டார்களே' என்று கண்கலங்குகிறார்கள். எம். ஜி. ஆர். ஆட்சியை கவிழ்க்கவா நாங்கள் ஓட்டு போட்டோம். இது என்ன அக்கிரமம்! அவர் ஐந்து ஆண்டுகள் ஆட்சி நடத்த வேண்டுமென்றுதானே நாங்கள் வாக்களித்தோம்? இப்படி இரண்டரை ஆண்டுக்குள் கலைத்துவிட்டார்களே என்று ஆத்திரப்படுகிறார்கள்.

1976-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் கருணாநிதி அவர்களின் ஆட்சியை நீக்கியபோது 'லஞ்ச ஊழல் நடைபெற்றது- சட்டம் - ஒழுங்கு கெட்டுவிட்டது- அதிகார துஷ்பிரயோகம் செய்யப்பட்டது- பாரபட்சம் காட்டப்பட்டது- மக்களின் நலன் புறக்கணிக்கப்பட்டது- வரிப்பணம் சுரண்டப்பட்டது- என்று குற்றங்களை சுட்டிக்காட்டி ஆளுநர் அறிக்கை அனுப்பினார். மத்திய அரசு ஆராய்ந்து ஏற்று, குடியரசு தலைவருக்குப் பரிந்துரை செய்து இறுதியாக குடியரசு தலைவர் ஐந்து ஆண்டுகள் முடியுந்தருவாயில் அன்றைய ஆட்சியை நீக்கினார்.

### குற்றம்கூற முடியுமா?

ஆனால், இரண்டரை ஆண்டுகால அண்ணா தி. மு. கழக ஆட்சியில் சுட்டிக்காட்டப்படக்கூடிய குற்றங்கள் எதுவுமே இல்லாதபோது, எந்தவிதமான அடிப்படைக் காரணமும் காட்டாமல் நாடாளுமன்றத் தேர்தலில் நாங்கள் வெற்றி பெற்றுவிட்டோம்; அதனால் மாநில அரசுகளை கலைக்கிறோம். மூன்று மாதத்தில் இரண்டு தேர்தல்களை நடத்துவோம் என்றால் என்ன நியாயம்? இந்தக் கேள்வியை வறுமையோடு போராடிக் கொண்டிருக்கும் ஒரு ஏழை நாட்டின் குடிமகன் என்ற முறையில் புரட்சித் தலைவரும், அனைத்திந்திய அண்ணா தி. மு. க. வும் தமிழக மக்கள் முன்னால் வைக்க விரும்புகிறார்கள்.

இந்தியா போன்ற ஏழை நாட்டில் ஒரு பொதுத் தேர்தல் நடத்துவதென்றால் பலகோடி ரூபாய் செலவாகிறது. பல்லாயிரம் பேருடைய உழைப்பு தேவைப்படுகிறது. இவ்வளவு பணத்தையும் மக்களின் உழைப்பையும் அடிக்கடி செலவழிப்பது அவசியம் தானா? இப்படி செய்வதால் தேர்தல் என்றாலே மக்களுக்குச் சலிப்பு வந்து விடாதா? தயவு செய்து எண்ணிப்பாருங்கள்,

இரண்டரை ஆண்டு காலத்தில் நாங்கள் என்ன குற்றம் செய்தோம்? தெரிவிக்கட்டும் நாங்கள் தலை வணங்குகிறோம்.

### இவைதான் குற்றமா?

கல்வித்துறையில் 10+2 என்ற புதிய முறையைப் புகுத்தி, கல்லூரிக் கல்வியை கிராமப்புறங்களுக்குக் கொண்டு சென்றோமே-அது குற்றமா?

இல்லை, மத்திய அமைச்சரே பாராட்டுகிற அளவுக்கு குடிதண்ணீர் இல்லாத குக்கிராமங்களுக்கும் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கும் திட்டத்தை விரைவாக நிறைவேற்றினோமே-அது குற்றமா?

நாடாளுமன்றத்தில் மத்திய நிதி அமைச்சரே பாராட்டி அறிவித்தபடி பொதுமக்கள் தந்த வரிப்பணத்தை கவனமாகவும், திட்டமிட்டபடியும் செலவு செய்து தமிழகத்தின் நிதி நிலையைத் திருப்தி அளிக்கும் வகையில் வைத்திருந்தோமே-அது குற்றமா?

இல்லை, அரசு அலுவலகர்கட்கு உயர்நீதிமன்ற நீதிபதி தலைமையில் சம்பளக்கமிஷன் அமைத்து, கமிஷனின் பரிந்துரைகளை ஏற்று பஞ்சப்படியையும், சம்பளத்துடன் இணைத்தது உட்பட பல சலுகைகள் அளித்ததோடு 55 வயது என்றிருந்த ஓய்வுபெறும் வயதை 58 வயது என்று உயர்த்தினோமே அதுதான் குற்றமா?

ஆண்டுதோறும், பெருமழை, புயல், வெள்ளம் என்று ஏற்பட்டாலும், உணவுப்பொருள் விளைச்சலை உயர்த்தி, அரிசியின் விலை உயராமல் பாதுகாத்ததோடு ஏழை எளிய மக்களுக்கு நிர்ணய விலையில் உணவுப் பொருள் வழங்க ஏற்பாடு செய்தோம் அது குற்றமா?

இல்லை, கிராமப்புறங்களை, நகர்ப்புறங்களோடு இணைக்க பல ஆயிரக்கணக்கான கிலோமீட்டர் சாலைகளை அமைத்தோம்- அது தான் குற்றமா?

கிராமப்புறங்களுக்கு பேருந்து வழித்தடங்களை அதிகப்படுத்தி மினி பஸ் என்ற சிறிய வாகனங்களை அறிமுகப்படுத்தினோமே-அது குற்றமா?

இல்லை, நஷ்டங்களில் இயங்கிக்கொண்டிருந்த அரசுப் போக்குவரத்துக் கழகங்கச் சீர்திருத்தி இலாபமீட்டி தொழிலாளர்கட்கு 20சதவிகிதம்வரை போனஸ் கொடுத்ததோடு, எங்குமே நடைபெறாத வகையில் விரைவுப் பேருந்துகளின் கட்டணத்தைக் குறைத்தோமே-அதுதான் குற்றமா?

ஏழை விவசாயிகளின் கஷ்டங்களை கருத்தில் கொண்டு சுமார் 23 கோடி ரூபாய் அரசுக் கடனையும், சுமார் 17 கோடி ரூபாய் கூட்டுறவுக் கடன்களின் வட்டியையும் தள்ளுபடி செய்து, முந்திய அரசில் 16 காசாக உயர்த்தப்பட்ட மின்கட்டணத்தை 12 காசாக குறைத்ததோடு மின்சார மீட்டர் கட்டணத்தையும் குறைத்து,

நெல்லின் கொள்முதல் விலையைக் கூட்டினோமே அதுதான் குற்றமா?

நீண்டகாலமாக நிறைவேற்றப்படாமல் இருந்த பட்டதாரி ஆசிரியர்களின் ஊதியத்தை உயர்த்தியதுடன், ஆசிரியப் பெருமக்களின் பெருவாரியான கோரிக்கைகளை நிறைவேற்றினோமே - அது குற்றமா?

இரண்டரை ஆண்டுகளில் புதியவரிகளையே போடாமல், 76 ஆம் ஆண்டில் போட்ட பணப்பயிர் மீதான வரி, தண்ணீர் தீர்வை ஆகியவைகளை ஆண்டு ஒன்றுக்கு 5 கோடி ரூபாய் அளவில் நீக்கினோமே - அது குற்றமா?

இல்லை, அரசு நிர்வாகங்களில் கட்சி ஊழியர்கள் தலையிடக் கூடாது என்று கண்டிப்பாக நடந்து எங்கள் கட்சிக்காரர்களே குறைபட்டுக்கொள்ளும் அளவுக்கு கண்ணியத்தோடு செயல்பட்டோமே அது தான் குற்றமா?

மருத்துவக் கல்லூரி, பொறியியல் கல்லூரி போன்ற தொழிற் கல்லூரிகளில் பேரம்பேசி, 'ரேட்' பெற்று இடம் ஒதுக்காமல் ஏழையாக இருந்தாலும் தகுதி உள்ளவர்களுக்கெல்லாம் இடம் கிடைக்கச் செய்தோமே அது குற்றமா?

இல்லை, பிள்ளைகளைப் பெற்றெடுத்தாலும், ஆதரவற்று வாழும் வயோதிகத் தாய்-தந்தையர்கட்கு உதவிப் பணமும், வருடத்தில் பொங்கல் திருநாளிலும், சுதந்திரத் திருநாளிலும் வேஷ்டி, சேலை வாங்கித் தந்து துயர் துடைக்க முயன்றோமே- அது குற்றமா?



எத்தனையோ இயற்கையின் சீற்றங்களுக்கிடையில் தண்ணீர் பஞ்சம் இல்லை, மின்சார வெட்டும் இல்லை என்ற நிலையை உருவாக்கினோமே-அது குற்றமா?

இல்லை, மாற்றுக் கட்சி அரசானாலும் மத்திய அரசுடன் நட்புணர்வோடு, நல்லுறவு கொண்டு மாநில மக்களின் நலன் கருதிச் செயல்பட்டோமே - அதுதான் குற்றமா?

கைத்தறி நெசவாளர்கள் முதல் கட்டிடத் தொழிலாளர்கள், கைவண்டித் தொழிலாளர்கள், பீடித் தொழிலாளர்கள் உட்பட எல்லோருக்கும் கூலி நிர்ணயம் செய்தோமே அது குற்றமா? இல்லை-

தலைநகர் சென்னையில் மட்டுமே கிடைத்து வந்த அரிய மருத்துவ வசதிகளை மாவட்டத் தலைநகர்களிலும் கிடைக்கச் செய்தோமே - அது தான் குற்றமா?

குடிசைமாற்று வாரியத்தின் பணிகளை தமிழகத்தின் மற்ற பகுதிகளுக்கும் விஸ்தரித்து..,அரிசன, ஆதித்திராவிட மக்களுக்கு வீடு கட்ட மனைகள் கிடைப்பதில் ஏற்பட்ட கஷ்டங்களை பரிசிலித்து மனை ஆர்ஜிதம் செய்யத் தனிச் சட்டம் கொண்டு வந்தோமே-அது குற்றமா?

இல்லை-இருண்டு கிடந்த ஏழைகளின் குடிசைகளில் இரண்டரை ரூபாய்க்கு மின்விளக்கு எரியச்செய்தோமே- அதுதான் குற்றமா?

இன்னும் இந்த இரண்டரை ஆண்டு காலத்தில் செய்துள்ள பணிகளை எடுத்துசொல்லிக்கொண்டே போனால் நேரம் போதாது.

### அவகாசம் தந்தனரா?

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக அரசு குற்றம் ஒன்றும் செய்யவில்லை. ஆனால் குறைகள் உண்டு. அந்த குறைகளிலே ஒன்று முடிவுகள் எடுப்பதில், அமுல்படுத்துவதில் காலதாமதம் ஆனது என்றுகூறுகிறார்கள்.... நல்ல உள்ளத்தோடு சிலர் சொல்கின்ற இந்த கருத்துக்குப் புரட்சித்தலைவர் அளிக்கும் பதிலைத் தெரிவிக்க கடமைப்பட்டுள்ளேன்.

புதிதாக பொறுப்பேற்றுக்கொள்ளும் ஒரு அரசு பழைய திட்டங்களை- நடைமுறைகளைப் பரிசீலனை செய்து, புதிய முடிவுகளை புதிய நடைமுறைகளை ஏற்படுத்தி பணிபுரிய சிறிதுகாலம் பிடிக்கும் என்பதை நடுநிலையாளர்கள் ஏற்றுக்கொள்வார்கள்.

அப்படி ஆராய்ந்து காரியங்கள் செய்ய எங்களுக்கு எங்கே அவகாசம் கிடைத்தது?

ஆண்டுதோறும் புயல், வெள்ளம் என்ற இயற்கையின் தாக்குதல்-

மீதி நேரங்களில் எதிர்க்கட்சிகளின் போராட்டம், கிளர்ச்சி, ஆர்ப்பாட்டம், என்ற செயற்கை தாக்குதல்,

என்றாலும், பேரறிஞர் அண்ணா அவர்கள் ஒருமுறை சட்டமன்றத்தில் எடுத்துக்காட்டியபடி OUR STEPS ARE MEASURE என்பதைப் போல் புரட்சித்தலைவர் அவர்கள் அளந்து, ஆனால் அழுத்தமாகத்தான் அடிகளை எடுத்து வைத்தார்கள்.

காரியங்கள் ஆற்றுவதில் "அவசரம்" என்பது வேறு, "வேகம்" என்பது வேறு ... அவசரக்காரன் என்ற பட்டப் பெயரே எதிலும் அவசரம் காட்டக் கூடாது என்பதற்காக ஏற்பட்ட பழமொழிதான்... அதனால தான் "அள்ளித் தெளிக்கப்பட்ட அவசரக் கோலம்" என்ற உதாரணத்தையும் சொல்வார்கள்.

ஆனால் முந்திய அரசு, வீராணம் நீரை சென்னைக்குக் கொண்டுவர 23 கோடியில் திட்டமிட்டு, இதுவரை 30 கோடிக்குமேல் செலவு செய்தும், வெட்டப்பட்ட குழிகளும் அரை குறையாகச் செய்யப்பட்ட பயன்படுத்த முடியாத சில ஆயிரம் குழாய்களும், சைதாப்பேட்டையிலே கையிலேகுடத்துடன் காவிரித் தாய் என்ற ஒரு சிலையும் தான் மிஞ்சியதே தவிர சென்னைக்குத் தண்ணீர் கிடைக்கவில்லையே...

கழிவு நீரைக் கூவத்தில் கலக்கவிடாமல் செய்ய முதலில் திட்டம் தீட்டாததால் சுமார் 8 கோடிக்கு மேல் கூவத்தில் கொட்டியும் கூவத்தின் நாற்றத்தைப் போக்க முடியவில்லையே.

கோடிக் கணக்கிலே செலவிட்டு அவசரம் அவசரமாகக் கட்டிய குடகனாறு அணை வெள்ளத்திலே அடித்துச்செல்லப்பட்டது.

பூம்புகார் போக்குவரத்துக் கழகத்திற்கு கோடிக் கணக்கில் கொட்டி வாங்கிய கப்பல்களுக்கு பெரியார் அண்ணா என்ற பெயர்தான் மிஞ்சியதே தவிர, வாங்கிய கப்பல்களை ஓட்டினாலும், நஷ்டம், ஓடாமல் நின்றாலும் நஷ்டம் என்று அரசுக்கு சுமையாக இருக்கிறது.

இவை எல்லாம் அவசர முடிவின் விளைவுகள்.

### அளந்து அடிவைத்தோம்

இப்படிப்பட்ட அவசரத்தை அறிஞர் அண்ணா அவர்கள் கற்றுத்தரவில்லை. அளந்து அடியெடுத்து வைக்க வேண்டும்... இதற்காக வேகம் காட்டவேண்டாமா என்றால், எங்கே திரும்பினாலும் வேகத்தடை அதாவது ஸ்பீட் பிரேக்கர் (Speed Braker) போட்டுக் கொண்டே வந்தார்களே எப்படி எங்களால் வேகமாக போக முடியும்?

சில நேரங்களில் மெதுவாகக் காரியங்களைச் செய்ய வேண்டிய நெருக்கடி எங்களுக்கு ஏற்பட்டது. மெதுவாகச் செய்தோம், ஆனால மந்தமாக அல்ல (Slow but not dull) புயலும், வெள்ளமும் தமிழகத்தைத் தாக்கிய பொழுது இயற்கையின் சீற்றத்தை எதிர்த்துப் போர்க்கால வேகத்தில் நடவடிக்கைகள் மேற்கொள்ளவில்லையா?

பழுதுபட்ட சாலைகள் செப்பனிடப்பட்டு, உடைக்கப்பட்ட கண்மாய்கள், ஏரிகள், அடைக்கப்பட்டு பாதிக்கப்பட்ட மக்களின் கண்ணீர் உடனே துடைக்கப்படவில்லையா?

புயல் ஏற்படுத்திய சேதத்தின் சுவடு தெரியாமல் புயல் வேகத்தில் காரியங்கள் நடைபெறவில்லையா? மக்களுக்கு உதவவில்லையா? நாடே பாராட்டவில்லையா?

இப்பொழுது சொல்லுங்கள் தவிர்க்க முடியாத சூழ்நிலையில்தான் தாமதங்கள் ஏற்பட்டிருக்கும்.. குறைகள் இருக்கலாம் ஆனால் குற்றங்கள் இழைக்கப்படவில்லை.குறைகள் தவிர்ப்பதற்குஉரியவை.குற்றங்கள் தான் தண்டனைக்கு உரியது... முந்திய அரசு தண்டிப்பதற்கு உரிய குற்றங்களைச் செய்ததால் தான் அரசு நீக்கப்பட்டது, கமிஷன் அமைக்கப்பட்டது-வழக்கு மன்றத்தில் வழக்குகளும் போடப்பட்டன.

ஆனால் வழக்குகளை யார் போட்டார்களோ, யார் குற்றம் சாட்டினார்களோ .. யார்மீது வழக்கு போடப்பட்டதோ - யார் மீது குற்றம் சாட்டப்பட்டதோ அவர்கள் இருவரும் இணைந்து வருகிறார்கள்... ஆச்சரியம். அதைவிட ஆச்சரியம் குற்றம் சாட்டப்பட்டவரை முதல்வர் ஆக்குவது தான் எங்கள் லட்சியம் என்கிறார்கள். இந்த முன்னாள் முதல்வரோ நான் வந்தால் என்னென்ன திட்டங்களை அமலாக்குவேன் என்பதற்குப் பதிலாக ஒரு புதிய தத்துவத்தையே நாட்டிற்குத் தருகிறார்.

முதலமைச்சராக யார் வரவேண்டும் என்பதைப் பற்றி கவலைபில்லை ... யார் முதலமைச்சராக வரக்கூடாது என்பதுதான் எனக்குள்ள மிகப்பெரிய கவலை என்கிறார் .. எப்படிப்பட்ட ஜனநாயகவாதி .. அடடா என்ன பெருந்தன்மை, எப்படிப்பட்ட பேருள்ளம்!

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக அணியில் உள்ள தோழமைக் கட்சியினர் அனைவரும் கழகம் தான் ஆட்சிப் பொறுப்பேற்கும், புரட்சித்தலைவர் தான் முதல்வர் என்கிறார்கள். ஆனால் எதிர் அணியின் இரண்டாவது தலைவரான முன்னாள் முதல்வரோ யார் வரக்கூடாது என்பதுதான் எனது கவலை என்பதுமூலம் சொந்தக் காழ்ப்புணர்ச்சிக்கும், குறுகிய ஆசாபாசங்கட்கும் அடிமைப்படுத்துகிறார்.

இந்த நிலையில் தான், நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் இந்த தேர்தல் நம்மீது சுமத்தப்பட்டுள்ளது.

அரசியல் சட்டத்தின் 356வது பிரிவு எங்களுக்கு மாநில அரசை கலைக்கும் அதிகாரத்தை வழங்குகிறது- எனவே கலைக்கிறோம் என்றால்...

"சிரமறுத்தல் வேந்தனுக்கு
பொழுது போக்காம்-
நமக்கோ உயிரின் வாதை"

என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பாடியதைத்தான் நினைவுகூரவேண்டியிருக்கிறது.

### அதிகாரம் இருந்தால்

உயிரைப் பறிக்கும் மரண தண்டனையை அளிக்கும் அதிகாரம் நீதிபதிக்குத் தரப்பட்டுள்ளது என்பதால், எல்லோரையும் கொலைக்களத்திற்கு அனுப்ப எந்த நீதிபதியும் எண்ணுவதில்லை. கொலை செய்ததாக குற்றம் சாட்டப்பட்டவனைக்கூட தீர விசாரித்து, அவனுடைய வாதங்களைக் கேட்டு சந்தேகமற நிரூபிக்கப்பட்டால்தான் தண்டனை வழங்குவார்கள். 99 பங்கு நிரூபிக்கப்பட்டு, ஒருபங்கு சந்தேகம் தோன்றினாலும் குற்றம் சாட்டப்பட்டவன் விடுவிக்கப்படுவான்.

இதுதான் தர்மம்-நீதி-சட்டம். ஆனால் அரசியல் சட்டத்தில் 356-வது பிரிவு அளிக்கும உரிமையைப் பயன்படுத்தி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மாநில அரசை ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி

(4-ம் பக்கம் பார்க்க)

## வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட விவசாயிகளின் விழிநீரைத்துடைத்த ஆட்சிபுரட்சித்தலைவர் ஆட்சி

# அண்ணா



## விலைவாசி உயர்வு: மூப்பனார் வியாக்யானம்

டெல்லியில் பிரதமர் இந்திரா, மத்திய அமைச்சர்களிடம் பேச்சுவார்த்தை நடத்திவிட்டு வந்துள்ள மூப்பனார் நிருபர்களுக்கு பேட்டியளித்திருக்கிறார்.

''விலைவாசிகள் மேலும் உயராமல் கட்டுப்படுத்தவும் அநியாய விலைவாசிகளைக் குறைக்கவும் கடும் நடவடிக்கை எடுக்கவேண்டும்'' என்று பிரதமர் இந்திராவிடம்கூறப்போவதாகமூப்பனார்தெரிவித்தார்'' அவசர நிலை காலத்தில் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் நல்ல பலன் தந்தன. அது போல் கிடுகிடு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று பிரதமரிடம் வற்புறுத்துவேன்'' என்றும் அவர் கூறினார்.

**பிரதமரை சந்தித்தவர் டெல்லியில் விலைவாசியைக்கட்டுப்படுத்தநடவடிக்கை எடுக்கும்படி கேட்கவில்லையாம்.**

இனிமேல்தான 'கிடு,கிடு' நடவடிக்கை எடுக்கும்படி கேட்டுக் கொள்ளப் போகிறாராம்;

'மந்திரி நமது மாநகர் தன்னில் மாதம் மும்மாரி மழை பொழிகிறதா?' என்று கேட்ட ராஜா கதை போல் இருக்கிறது!

விலைவாசி விஷம்போல் ஏறிக் கொண்டிருக்கிறது. மக்கள் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். மத்தியில் ஆட்சி கையில் இருக்கிறது. பிரதமரிடம் சொல்லி நடவடிக்கை எடுக்க திராணி இல்லாமல் இனிமேல் 'கிடுகிடு' நடவடிக்கையாம்!

கருணாநிதியோடு சேர்ந்தாலே பொய் சொல்வதற்கு...தேர்தலுக்காக எதையும் செய்வதற்குத் துணிவு வந்து விடுகிறது!

நீங்கள் "கிடு கிடு" நடவடிக்கை எடுப்பதற்கு முன்பு தேர்தலில் உங்கள் இருவரது கூட்டணியையும் 'ஓடு ஓடு' என்று மக்கள் துரத்தப் போகிறார்கள்.

-நாதன்

## தாமரை 21-வது ஆண்டு மலர் வெளியீடு

சென்னை, மே 9-தாமரை மாத இதழின் 21-வது ஆண்டுமலர் வெளியீட்டு விழா மாவட்ட மத்திய நூலகக் கட்டிடப் பகுதியில் உள்ள அவ்வை சண்முகம் கலையரங்கில் நடந்தது.

கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில செயலாளர் ப. மாணிக்கம் தலைமை வகித்தார். சிலம்பொலி செல்லப்பன் நூலை வெளியிட்டார். வல்லிக் கண்ணன் அதைப்பெற்றுக் கொண்டார்.

கம்யூனிஸ்டு தலைவர் எம் கல்யாணசுந்தரம், 'ஜனசக்தி' ஆசிரியர் தா. பாண்டியன், எம். வி. சுந்தரம், செந்தில்நாதன், சு. சமுத்திரம், ரகுநாதன் தி.க. சிவசங்கரன் ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டு பேசினர்.

கே.சி.எஸ் அருணாசலம் வரவேற்புரை யாற்றினா. ஆர். நல்லகண்ணு நன்றி கூறினார்.

### பேச்சாளர் முகவரி

வண்ணை அனுராதா
373, எம். பிளாக்
மேற்கு கல்லறைச் சாலை
சென்னை-21

தலைமைக் கழக அறிக்கை எண்: 50-80

## ஒழுங்கு நடவடிக்கை

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் அதிகாரப்பூர்வமான வேட்பாளர்களை எதிர்த்தும் தோழமைக் கட்சிகளின் வேட்பாளரை எதிர்த்தும் வேட்பு மனு தாக்கல் செய்து, சீர்குலைவு செயல்களில் ஈடுபட்டுவரும்-

சென்னை மாவட்டம்: ராதாகிருஷ்ணன்நகர் தொகுதி:
**திருமதி அம்சா**

செங்கற்பட்டு மாவட்டம்: பொன்னேரி தொகுதி:
**ஆர். எஸ். முனிவேலு**

வட ஆற்காடு மாவட்டம்: காட்பாடி தொகுதி:
**எம். ஏ. ஜெயவேலு**

சேலம் மாவட்டம்: தாரமங்கலம தொகுதி:
**எஸ். செம்மலை**

பெரியார் மாவட்டம்: கோபிசெட்டிபாளையம் தொகுதி:
**கே. என். கே. ராமசாமி**

திருச்சி மாவட்டம்: அரியலூர் தொகுதி:
**ஏ. எஸ். ஆராமிர்தம்**

ராமநாதபுரம் மாவட்டம்: மானாமதுரை தொகுதி:
**உக்கிரபாண்டியன்**

மதுரை மாவட்டம்: உசிலம்பட்டி தொகுதி:
**பி. கே. எம். முத்துராமலிங்கம்**

ஆகிய எட்டு பேர்களும் இன்று முதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புக்களில் இருந்தும் நீக்கப்படுகிறார்கள். இவர்களுடன் கழகச் சார்பு மன்றத் தோழர்கள் யாரும் எவ்வித தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது. இவ்வறிவிப்பை மீறி யாரேனும் நடந்துகொண்டால் அப்படிப்பட்டவர்கள் கடுமையான ஒழுங்கு நடவடிக்கைக்கு ஆளாவார்கள் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

திருமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலோடும், உயர்திரு பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அவர்களின் அனுமதியுடனும் இவவறிவிப்பு வெளியிடப்படுகிறது.

டாக்டர் எச் வி ஹண்டே எம் எல் சி
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி மு க

சென்னை
9-5-80

அமைந்தகரையில்

## டாக்டர் நாவலர் பேசுகிறார்

சென்னை, மே9-அண்ணா நகர் தொகுதி கழக வேட்பாளர் டாக்டர் ஹண்டேயை ஆதரித்து தேர்தல் பிரச்சாரப் பொதுக்கூட்டம், தொகுதி தலைமை தேர்தல் அலுவலகத்திறப்பு விழா வருகிற 11-ந்தேதி (ஞாயிறு) மாலை 7 மணிக்கு அமைந்தகரை பெருமாள் கோவில் தெருவில் நடக்கிறது.

நா. துவாரகநாதன் தலைமை வகிக்கிறார்.

கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர், பம்பாய் ராயப்பன், திருமதி சந்திரா, வி. ராஜ் மோகன், வ. கோதண்டராமன், கி. வரதராசன், மு. மோகன், கே ராஜலட்சுமி. நா ராபாபு, ஆ செல்வராஜ் எஸ் பி சண்முகம், பி எல் ராதாகிருஷ்ணன், எஸ் ஜெயசந்திரன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

### ப. உ. ச. நிகழ்ச்சிகள்

மே 10-திருச்சி
,, 11-மதுரை

## ஆர். எம். வீ. பேச்சு...

[ 3 ம் பக்கத் தொடர்ச்சி ]

கலைத்துவிட்டு, நினைத்த நேரத்தில் நாட்டு மக்களின் மீது தேர்தலைச் சுமத்துவது ஜனநாயகத்தின் பெயரால் ஏற்படுத்தப்பட்ட மிகப்பெரிய அநீதியாகும்.

இந்த அநீதியைத் துடைக்க உங்கள் கட்டளையை ஏற்று மக்களுக்குப் பணிபுரிய, திட்டமிட்ட பணிகள் நிறைவேற அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக வேட்பாளர்களுக்கு ''இரட்டை இலை'' சின்னத்திலும், மற்றத் தோழமைக் கட்சிகளுக்கு அவரவர்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள சின்னத்திலும்வாக்களித்து மீண்டும் அண்ணாவின் அரசு அமைய ஆதரவு தர புரட்சித்தலைவர் சார்பில் வேண்டுகிறேன்.

இவ்வாறு தமது வானொலி உரையில் ஆர்.எம்.வீ. கூறினார்.